உ

சிவமயம்

## நகரத்தார் சங்கம் திருவாரூர்





ஸ்ரீ தியாகராஜர்



ஸ்ரீ கமலாம்பாள்

# திருவாரூர் சிறப்பும், அதனை சுற்றியுள்ள ஸ்தலங்களும்



உயிரா வணம் இருந்து உற்று நோக்கி உள்ளக்கிழியின் உரு எழுதி
உயிர் ஆவணம் செய்திட்டு உன் கைத் தந்தால் உணரப்படுவாரோடு ஒட்டி வாழ்தி
அயிராவணம் ஏறாது ஆன்ஏறு ஏறி அமரர்நாடு ஆளாதே ஆரூர் ஆண்ட
அயிராவணமே என் அம்மானே நின் அருள் கண்ணால் நோக்காதார் அல்லாதாரே.

நன்கொடை : ரூ.10/-

உ

சிவமயம்






சிவநேசச் செல்வர்கள், எங்கு சென்றாலும் சைவத்தையும், தர்மத்தையும் காக்கும் நற்பண்பு மிக்கவர்கள், நாணயமானவர்கள், நாநயமானவர்கள் என்று போற்றப்படும் நகரத்தார் பெருமக்களுக்கு எங்கள் வணக்கம்.

சைவ சமயத்தில் கோயில் என்றால் ஆருத்ரா தரிசன நடராஜரின் - சிதம்பரம் கோயிலையும், ஆரூர் தியாகராஜர் கோயிலையும் குறிக்கும்.

திருவாரூர் கோயில் எப்போது தோன்றியது என்பதற்கான வரலாறு இன்று வரை நிர்ணயம் செய்யப்படவில்லை.

பிறக்க முக்தியான - மூலாதாரத் தலமான - பிருத்வி தலமான - மனுநீதிச் சோழன் மூலம் நீதி நிலை நாட்டிய தலமான - சங்கீத மும்மூர்த்திகளும் அவதரித்த தலமான - சப்த விடங்கர் ஸ்தலங்களில் முதன்மையானதுமான - சிதம்பரத்திற்கு முற்பட்ட சைவ சமய கோயிலான - பதினெட்டுச் சித்தர்களில் ஒருவரான கமல முனிவர் வாழ்ந்த இடமான - திருமுறைகளில் சுமார் 400 பாடல்களை பெற்றதுமான - ஆரூரில் பிறந்தார்க்கெல்லாம் அடியேன் என சுந்தரர் புகழும் இடமான - திருவாரூரில் பிறந்தவர்கள் எல்லோரும் நாயன்மார்கள் (61 வது) என பெரியபுராணம் பெருமை பேசும் இடமான - தலம். மூர்த்தி, கீர்த்தி மூன்றிலும் சிறந்ததுமான - ஆழித்தேரை உடையதுமான நித்திய பிரதோஷ ஸ்தலமானதும் - ஒரு முறை சாயரக்ஷை தரிசனம் செய்தால் ஒரு வருடம் சிவ தரிசனம் செய்த பலன் கிடைக்கும் ஸ்தலமானதுமான - குரு தெக்ஷிணாமூர்த்தியின் ஜீவ சமாதி உள்ளதுமான - ஐந்து வேலியில் கோவில், தெப்பக்குளம் (கமலாலயம்) உடையதுமான - மரகத லிங்கம் ( ஆதி விடங்கர்) மரகத விநாயகரை கொண்டதுமான திரு+வாழும்+ஊர் - பூமகளுக்கு இதய கமலமாகவும் விளங்குவது திருவாரூர்.

முசுகுந்த சோழனால் விண்ணுலகிலிருந்து கொண்டு வரப்பட்ட மரகத விடங்கர் - தியாகராஜர் - பாகம்பிரியாள் - ஸ்கந்தர் - வன்மீகநாதர் - சோமகுலம்பாள் - நீலோத்பலாம்பாள் - கமலாம்பிகை - மனோன்மணி தாயார் ஆகியோர் அருள் பாலிக்கும் தலம். நவகிரகங்கள் நேர் வரிசையில் நின்று அருள் பாலிக்கும் ஸ்தலம்.

சாயரக்ஷை எனப்படும் திருவந்திக்காப்பு நேரத்தில் சிவகணங்களும், தேவர்களும் வந்து இத்தலத்தில் கூடுகின்றனர். எல்லா கோயிலிலும் திருமறைகளை ஓதும் முன் திருச்சிற்றம்பலம் எனக்கூறுவர். ஆனால் திருவாரூரில் ஆரூரா தியாகராஜா என்றே கூறுவர். (தில்லைக்கு மூத்த பெரியகோயில் இது என்பதால்).

இக்கோயில் பூங்கோயில் எனப்படும். திருவாரூர் தேர் அழகு என போற்றப்படும் ஆழித்தேரோட்டம் காண வாழ்வில் பல புண்ணியங்கள் செய்திருக்க வேண்டும்.

திருமகள் தவம் செய்து பேறு பெற்றது.
கலைமகள் தவம் செய்தது.
கமலை பராசக்தி தவம் புரிந்தது.
பரவை நாச்சியார் அவதார தலம்.
இசை ஞானியார் பிறந்த தலம்.

மும்மூர்த்திகள் – தியாகப் பிரம்மம் – முத்துசாமி தீட்சதர் – சியாமா சாஸ்திரிகள் - அவதரித்த ஸ்தலம் இது. நவக்கிரக ஸ்தலத்தில் இது சந்திரனுக்குரியது. இறைவன் தனது பாதங்கள் பதித்து நடந்த ஸ்தலங்களில் இது முதன்மையானது. தியாகராஜாவின் இடது பாதம் மார்கழி திருவாதிரையிலும், வலது பாதம் பங்குனி உத்திரத்திலும், பதஞ்சலி வியாக்ரபாதருக்காக தரிசனம் தரும் நாட்கள் ஆகும். பாரி நாயனமும், பஞ்சமுக வாத்தியமும் இக்கோயிலின் தனிச் சிறப்பாகும்.

புற்றிடம் கொண்டார் (வன்மீக நாதர்), அசலேஸ்வரர், ஆடகேஸ்வரர், ஆனந்தீஸ்வரர், சித்தீஸ்வரர் கோயில் என ஐந்து கோயில்களை உள்ளடக்கியது. விஸ்வேஸ்வரர் எனப்படும் சன்னதி முழுவதும் கல் திருப்பணியால் ஆனது. வீடு கட்டும் முன் இவரை வணங்குவது அனைத்து விதமான வாஸ்து தோஷங்களையும் நீக்கும். கடன், நோய் தீர்க்கும் ரணவிமோசனருக்கு நடைபெறும் அமாவாசை அபிஷேகம் மிக சிறப்பானது.

தியாகராஜா கோயிலின் உள்ளே உள்ள அருங்காட்சியகம் பார்க்க வேண்டிய ஒன்றாகும்.

புலிவலம் பெருமாள் கோயில் விசேஷமானது.

குரு தெக்ஷிணாமூர்த்தியின் ஜீவ சமாதி அருள் பாலிக்கும் மடாலயம் ஆகும்.

கிழக்கு வீதியில் உள்ள பஞ்சின் மெல்லடியாள், தூவாயநாதர் கோயில் அதில் உள்ள சனிச்வரனின் தனி சன்னதி. பால ஐயப்பன்

34-1

சனனதி எதிரில் உள்ள பழனியாண்டவர் கோயில் ஆகியவை அருள் பாலிக்கும் ஸ்தலம் ஆகும். சுந்தரர் தனது வலது கண்ணை திரும்ப பெற்றது இந்த தூவாயநாதர் கோயிலில் தான்.

திருமஞ்சன வீதியில் உள்ள இராஜ துர்க்கை கோயில் அஸ்த நட்சத்திரத்திற்கான கோயிலாகும்.

வடக்கு மடவிளாகம் வீதியில் உள்ள கல் தேர் பார்க்க வேண்டிய ஒன்று.

திருவாரூரை சுற்றியுள்ள, பார்க்க வேண்டிய ஸ்தலங்கள்.

திருப்பள்ளி முக்கூடல் – குருவி ராமேஸ்வரம் – ஜடாயுவுக்கு அருள் செய்த ஊர்.

கேக்கரை – இராமர் கயை – ராமன் தந்தை தசரதனுக்கு பித்ரு கடன் செய்த ஊர்.

## திருவாரூர் – தஞ்சாவூர் வழித்தடத்தில் உள்ள ஊர்கள் :

**விளமல் :**
பதஞ்சலி – வியாக்கரபாதர் கோயில்.

**எண்கண் :**
முருகன் கோயில் – கண் தெரியாத சிற்பி இந்த சிலையை வடித்து கண் பெற்றார். மயிலின் இரண்டு கால்களிலும் முருகனின் மொத்த எடையும் தாங்குமாறு வடிவமைக்க பட்டுள்ளது.

**திருக்கொள்ளம்புதூர் :**
கொரடாச்சேரி அருகில் உள்ள பாடல் பெற்ற ஸ்தலம். நகரத்தார் திருப்பணிகோயில்.

**ஆலங்குடி :**
நவக்ரகங்களில் குரு ஸ்தலம்.

**வலங்கைமான் :**
சீதளமாரியம்மன் கோயில் – பாடை காவடி திருவிழா பிரசித்திபெற்றது.

## திருவாரூர் – கும்பகோணம் வழித்தடத்தில் உள்ள ஊர்கள் :

**வடகண்டம் :**
கரவீர நாதர் மின்னொளியம்மை கோயில்.

**மணக்கால் அய்யம்பேட்டை :**
குபேரன் சன்னதியுடன் உடைய வைகுண்ட பெருமாள் ஆலயமும், பாடல் பெற்ற அபி முக்தீஸ்வரம் ஆலயமும் உள்ளது.

**ஸ்ரீவாஞ்சியம் :**
எம பயம் நீக்கும் ஸ்தலம். கார்த்திகை சோம வாரத்தன்று கங்கை இங்கு வருவதாக ஐதீகம். இது மகம் நட்சத்திரத்திற்கான கோயிலாகும்.

**திருக்கண்ணமங்கை :**
நூற்றி எட்டு திவ்ய தேசங்களில் இது 16 வது திவ்ய தேசமாகும். பக்தவத்சலம் பெருமாள் திருநாமம். தேனீக்கள் ரூபத்தில் தேவர்கள் இங்கு பூஜை செய்வதாய் ஐதீகம்.

**குடவாசல் :**
பாடல் பெற்ற ஸ்தலம். மாடக்கோயிலில் ஒன்றாகும்.

**சோங்காலிபுரம் :**
தாத்தாதிரேயர் கோயில் கார்ய வீரியார்சுனர் சக்கரம் உள்ளது.

**திருச்சேறை :**
நூற்றி எட்டு திவ்ய தேசங்களில் இது 15 -வது திவ்ய தேசமாகும். சாரங்கநாதர் பெருமாள் திருநாமம் கடன் தீர்க்கும் ஸ்தலமாகும்.

**நாச்சியார்கோவில் (திருநறையூர்) :**
நூற்றி எட்டு திவ்ய தேசங்களில் இது 14 – வது திவ்ய தேசமாகும். ஸ்ரீனிவாசன் பெருமாள் திருநாமம். கல் கருடன் கோயில் பிரார்த்தனைகளை நிறைவேற்றும் ஸ்தலமாகும். இங்குள்ள மற்றொரு கோயிலில் சனிஷ்வரன் பகவான் தன் மனைவி நீலா, மகன் குளிகன், மாந்தி உடன் சுப மங்கள சனிஸ்வரராக அருள் பாலிக்கிறார்.

**அய்யாவாடி :**
பிருத்யங்கர காளிகோயில் அமாவாசை, பவுர்ணமி பூஜை சிறப்பு.

**திருநாகேஸ்வரம் :**
இராகு தோஷ பரிகார ஸ்தலம்.

**உப்பிலியபபன் கோவில் :**
நூற்றி எட்டு திவ்ய தேசங்களில் இது 13 – வது திவ்ய தேசமாகும். உப்பிலியப்பன் பெருமாள் திருநாமம். கல்யாண உற்சவம் மிக விசேஷம்.

## திருவாரூர் – மயிலாடுதுறை வழித்தடத்தில் உள்ள ஊர்கள் :

**முடிகொண்டான் :**
பரத்வாஜர் விருந்து நடந்த ஊர் பெருமாள் கோயில் விசேடம்.

**கூத்தனூர் :**
சரஸ்வதிக்கு தனியாக கோயில் உள்ள ஒரே ஊர்.

**சிதலபதி :**
ஆதி விநாயகர் கோயில் (மனித தலையுடன்), நகரத்தார் திருப்பணிகோயில்.

**திருமெய்ச்சூர் :**
லலிதாம்பிகை கோயில். லலிதா சகஸ்ரநாமம் இங்கு பாட பெற்றது.

**திருப்பாம்புரம் :**
இராகு, கேது தோஷ பரிகார ஸ்தலம்.

**திருவாரூர் – நாகை வழித்தடத்தில் உள்ள ஊர்கள் :**

**கீழ்வேளூர் :**
அஞ்சு வட்டத்து அம்மன், குபேரன் கோயில்.

**சிக்கல் :**
சூரசம்காரத்தின் போது முருகன் வேல் வாங்கும் சமயத்தில் வியர்க்கும் காட்சி அற்புதமானது. இங்குள்ள கோலவமணர் கோயில் தரிசிக்க தக்கது.

**பொரவச்சேரி :**
முருகனின் சிலை நாடி, நரம்புகள் உள்பட தெரியும் அற்புதமான அமைப்பு கொண்டது. இங்கு கோயிலூர் மடத்தின் கோயில் ஒன்று உள்ளது. நகரத்தார் திருப்பணிகோயில்.

**திருக்கண்ணங்குடி :**
நூற்றி எட்டு திவ்ய தேசங்களில் இது 18 – வது திவ்ய தேசமாகும். லோகநாதன் சியாமள பெருமாள் திருநாமம்.

**ஆவராணி பெருமாள் கோயில் :**
திருவனந்தபுரம் போல் மூன்று பிரிவாக பெருமாளை தரிசிக்கலாம்.

**நாகை :**
நீலாயதாட்சி கோயில் பாடல் பெற்ற ஸ்தலம், நூற்றி எட்டு திவ்ய தேசங்களில் இது 19–வது திவ்ய தேசமாகும் சௌந்தரராஜன் பெருமாள் திருநாமம்., நெல்லுகடை மாரியம்மன் கோயில், கலங்கரை விளக்கம் காணத்தக்கது.

**நாகூர் :**

இந்து, முஸ்லீம் ஒற்றுமைக்கான ஸ்தலம். நாகநாதர் கோவில் இங்கு உள்ளது.

**வேளாங்கண்ணி :**

இந்து, கிறிஸ்தவர்கள் ஒற்றுமைக்கான ஸ்தலம். மாதா கோயில் உலக பிரசித்தி பெற்றது.

## திருவாரூர் – நாகை மற்றொரு வழித்தடத்தில் உள்ள ஊர்கள் :

**திருமருகல் :**

பாடல் பெற்ற ஸ்தலம். செட்டி பிள்ளைக்கு திருணம் நடந்த ஸ்தலம்.

**திருக்கண்ணபுரம் :**

நூற்றி எட்டு திவ்ய தேசங்களில் இது 17–வது திவ்ய தேசமாகும். சௌரிராஜன் பெருமாள் திருநாமம்.

**விற்குடி :**

அட்டவீரட்ட தலங்களில் ஒன்று. நகரத்தார் திருப்பணி.

**திருசெங்காட்டங்குடி :**

பிள்ளைக்கறி சமைத்த ஊர். பாடல்பெற்ற ஸ்தலம்.

**திருப்புகலூர் :**

நாவுக்கரசர் மோட்சம் பெற்ற ஊர். வாஸ்து தோஷ நிவர்த்தி ஸ்தலம்.

**சீயத்தமங்கை :**

பைரவருக்கு சிறப்பு பெற்ற கோயில்.

## திருவாரூர் – திருத்துறைப்பூண்டி வழித்தடத்தில் உள்ள ஊர்கள் :

**திருக்காரவாசல் :**

ஸப்தவிடங்கர் ஸ்தலங்களில் ஒன்று. பாடல் பெற்ற ஸ்தலம்.

**திருநெல்லிக்காவல் :**

பாடல் பெற்ற ஸ்தலம்.

**திருகொள்ளிக்காடு :**

பொங்கு சனிஸ்வரர் அருள் பாலிக்கும் தலம். பாடல் பெற்ற ஸ்தலம்.

**திருக்குவளை :**

ஸப்தவிடங்கர் ஸ்தலங்களில் ஒன்று. பாடல் பெற்ற ஸ்தலம்.

**குண்டையூர் :**

சுந்தரருக்கு இறைவன் நெல் அளந்த ஊர். பாடல் பெற்ற !ஸ்தலம்.

**எட்டுக்குடி :**

கண் தெரியாத சிற்பி வடித்த சிலை. சித்ரா பவுர்ணமிக்கு அனைத்து கிராமங்களிலிருந்தும் வந்து செய்கின்ற பாலாபிஷேகம் காண சிறப்பு. நாகை நகரத்தாரால் நிர்வகிக்கப்படும் நகரமடம் உள்ளது.

**திருவாய்மூர் :**

ஸப்தவிடங்கர் ஸ்தலங்களில் ஒன்று. பாடல் பெற்ற ஸ்தலம்.

**வேதாரண்யம் :**

ஸப்தவிடங்கர் ஸ்தலங்களில் ஒன்று. பாடல் பெற்ற ஸ்தலம்.

**தில்லைவிளாகம் :**

இராமர் கோயில்.

**கோடியக்கரை :**

குழகர் கோயில் உள்ளது. புண்ணியத்தீர்த்தம், பறவைகள் சரணாலயம் காணத்தக்கது.

திருவாரூர் – மன்னார்குடி மற்றும் முத்துப்பேட்டை வழித்தடத்தில் உள்ள ஊர்கள் :

**வேளுக்குடி :**

பெருமாள் கோயில் உள்ளது.

**மன்னார்குடி :**

இராஜகோபால பெருமாள் கோயில் உள்ளது. சூட்டுக்கோல் சாதுசாமி கோயில் உள்ளது.

**வடுவூர் :**

கோதண்டராமர் கோயில் உள்ளது. பறவைகள் சரணாலயம் உள்ளது.

**முத்துபேட்டை :**

மிகப்பெரிய தர்கா அமைந்துள்ளது. சதுப்பு நிலக் காடுகளும் (லகூன் தீவு) காணத்தக்கது.

உ

சிவமயம்



திருவாரூர், மடப்புரம்

**ஸ்ரீ குருதெட்சிணாமூர்த்தி சுவாமிகள்**





குனித்த புருவமும் கொவ்வைசெவ்வாயில் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால்வெண்நீரும்
இனித்தம் உடைய எடுத்த பொற்பாதமும் காணபெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மா நிலத்தே.

– திருநாவுக்கரசர்

திருச்சிற்றம்பலம்